30. வசீகரமான புன்னகை பூத்து நிற்பவளே.
31. சக்கரம்போல வட்டமான முகமுடையவளே.
32. போரில் மிக விருப்பம் உடையவளே உனக்கு நமஸ்காரம்.
33. உமையம்பிகையே உனக்கு நமஸ்காரம்.
34. சாகம்பரியே உனக்கு நமஸ்காரம்.
35. மகேசுவரனது திருவுருவாய்த்திகழ்பவளே.
36. வாசுதேவனது திருவடிவமாய்த் தோன்றுபவளே.
37. கயிடபனைக் கொன்று அருளினவளே.
38. மஞ்சள்நிறக் கண்கள் உடையவளே.
39. பலவகை உருக்கொண்ட கண்களைக் கொண்டவளே.
40. மிக்க புகைநிறங் கொண்ட கண்களை உடையவளே.
41. வேதங்களால் துதிக்கப் பெற்றவளே.
42. பெரு நல்வினை வடிவங்கொண்டவளா யிருப்பவளே.
43. வேள்வி, முனிவர், முதலானவர்க்கு நன்மை செய்பவளே.
44. கடந்த-பொருள்களை உணர்ந்தவளே.
45. நாவலந்தீவிலுள்ள தலைநகர்களின் கோவில்களில் எல்லாம் என்றுமே திருமுன் காட்சி தருபவளே.
46. வித்தைகளுள் நீ பிரமவித்தை யாவாய்.
47. பிராணிகளுக்கு மகா நித்திரை யாவாய்.
48. குகப்பெருமானது அன்னையே
49. பகவதியே
50. துர்க்கை யம்பிகையே.
51. காடுகளில் வாழ்பவளே
52. நீ சுவாகாதேவி யாகிறாய்.
53. நீ சுவதாதேவி ஆகிறாய்.
54. நீ கலையும் ஆவாய்
55. நீ காஷ்டையும் ஆவாய்
56. நீ சரசுவதியும் ஆகிறாய்
57. நீ வேத மாதாவான சாவித்திரி தேவியும் ஆகிறாய்
58. மறைமுடி நூல்களில் புகழப்படும் கோப்பெருந் தேவியே! தூய உள்ளத்துடன் நீ துதி செய்யப்பெற்றாய். உன் திருவருளால் போர்க்களத்தில் எப்போதும் எங்கும் எனக்கு வெற்றிமேல் வெற்றி கிடைக்கவேண்டும்.
59. நீ காடுகளில் என்றும் இருந்து வருகிறாய்
60. நீ அச்சமூட்டும் அரண்களிலும் என்றும் இருந்து வருகிறாய்
61. நீ அடியார்களுடைய வீடுகளில் என்றும் இருந்து வருகிறாய்.
62. நீ பாதாளத்திலும் என்றும் இருந்து வருகிறாய்
63. நீ போரில் அசுரர்களை வெல்கிறாய்
64. நீ ஜம்பினி மங்கை ஆவாய்

65. நீ மோகினி மங்கை ஆவாய்
66. நீ மாயை ஆவாய்
67. நீ ஹ்ரீம் சக்தி ஆவாய்
68. நீ ஸ்ரீம் சக்தி ஆவாய்
69. நீ ஓம் சக்தி ஆவாய்
70. நீ காந்தி கொண்ட சந்தியாதேவி ஆவாய்
71. அவ்வண்ணமாக அன்னையான சாவித்திரி ஆவாய்
72. நீ துஷ்டி ஆவாய்
73. நீ புஷ்டி ஆவாய்
74. நீ தைரியம் ஆவாய்
75. சந்திர சூரியர்களை வளர்ச்சியுறப்பண்ணும் பேரொளியாவாய்
76. ஐசுவரியமுடையவர்களுடைய பெருஞ் சம்பத்தும் ஆவாய்
77. நீ சமாதியில் சித்தர்களால் பார்க்கப்படுகிறாய்
78. நீ சமாதிநிலையில் சாரணர்களாலும் பார்க்கப்படுகிறாய்

(இவ்வாறு ஸ்தோத்திரம் பண்ணின அர்ச்சுனனுக்கு தேவியின் காட்சியும், அருளும், மறைவும் உண்டாக நம்பிக்கை கொண்டனன் என்பது நடுவில் உள்ளது.)

## இத்தோத்திரஞ் செய்வதன் பயன்.

காலையில் இத்தோத்திரத்தைப் படிப்பவனுக்கு எப்பொழுதும்

(1) யக்ஷ, ராக்ஷஸ, பிசாச, பயம் உண்டாகாது.
(2) விரோதிகள் ஏற்படமாட்டார்கள்.
(3) பாம்பு முதலான விஷ ஜந்துக்களின் பயம் உண்டாகாது.
(4) ராஜகுல பயம் உண்டாகாது.
(5) அவன் விவாதத்தில் (சொல்போர்) வெல்வான்.
(6) சிறையினின்று விடுபடுவான்.
(7) துன்பங்கள் நீங்கப் பெறுவான் (இது உறுதி)
(8) திருடர்களால் விடப்படுவான்.
(9) போரில் எப்பொழுதும் வெற்றியே பெறுவான்.
(10) அதிக ஐசுவரியங்களைப் பெறுவான்.
(11) நோய்கள் நீங்கப் பெறுவான்.
(12) உடல் வன்மை மிகப் பெறுவான்.
(13) நூறு பிராயம்வரை உயிரோடு இருப்பான்.
(14) சௌக்கியங்கள் எல்லாம் அடைவான்.

புத்திமானான வியாசபகவானுடைய அனுக்கிரகத்தாலே என்னால் இது காணப்பட்டது என்று அர்ச்சுனன் செய்த துர்க்கா ஸ்தோத்திரம் முற்றுப்பெற்றது.

உ

# அம்பிகையின் அருள்.

## ஸ்ரீ லலிதா மகாத் திரிபுர சுந்தரி தேவி துணை.

"நம்பினோர் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு"
அம்பிகையின் அருள் இருந்தால் அனைத்தையுமே பெறலாம்."
என்றார், பாரதியார்.

நமது மத குருக்கள் ஆன **ஆதி சங்கர பகவத் பாதாள்** ஜகன்மாதாவைக் குறித்துச் **சௌந்தரியலஹரியில்**, "எல்லா உலகங்களுக்கும் தாயே! நீ வரங்கொடுப்பதாகவும், பயப்பட வேண்டாம் என்று அருளுவதாகவும், மற்ற தேவர்கள் அபிநயம் பிடித்திருப்பதுபோல, க் கைகளை வரத அபயத ஹஸ்தங்களாக வைத்துக்கொண்டிருக்கவில்லை. ஏனென்றால், பயத்தை நீக்குதற்கும், ஆசைப்பட்டதற்கும் அதிகம் ஆக, வேண்டிய பலன்களைக் கொடுப்பதற்கும், வல்லமை படைத்த திருவடி மலர்களைக் கொண்டிருக்கிறாய்" என்று தான் அறிந்த விதமாக, த் தோத்திரம் செய்திருக்கிறார். **மற்ற தேவர்கள், கைகளால்** தருவனவற்றை **அம்பிகை தன் பாதங்களால்** அருளுவள் என்பது தெரிகிறதனால் அம்பாளுடைய மகிமை அளவிட முடியாதது என அறிந்துகொள்க.

சில தெய்வங்கள் இவ்வுலக சுகங்களைமட்டும் தருவன. மற்றுஞ் சில தெய்வங்கள் மோக்ஷத்தை மட்டும் கொடுப்பன. அம்பிகை ஒருத்தியே இவ்வுலக இன்பத்தையும், அவ்வுலக இன்பத்தையும் தரும் வல்லமை யுடையவள், என்றும் அறிக. அம்பிகையைத் தொழும் பக்தருக்குப் போகமும் மோக்ஷமும் **கைகண்ட பலன்களாதும்** என்பதில் சந்தேகமில்லை.

எண்ணும்போதெல்லாம், ஒரு கையில் கரும்பு வில்லும், ஒரு கையில், மலர் அம்பும், ஒரு கையில் பாசமும், ஒரு கையில் அங்குசமும் ஏந்திப் புன்னகை கொண்டிருக்கும் **புவனேசுவரி யம்பிகையையே** எண்ணி இனிது மகிழ்ந்திருக்க.

மேலும், **ஆசாரிய பாதாள்**, அம்பாளிடம் பின்வருமாறு முறையிடுகிறார்கள்.

நான் மந்திரம் அறியேன், யந்திரம் அறியேன், துதிக்கவும் அறியேன், அழைக்கவும் தெரியாது, தியானிக்கவும் தெரியாது, உன் புண்ணிய கதைகளைச் சொல்லவும் தெரியாது, உன்னுடைய முத்திரை (அடையாளம்) களும் தெரிந்துகொள்ளவில்லை, கதறி என் துன்பங்களைச் சொல்லிக்கொள்ளவும் தெரியாது, ஆனால் **உன் பாதமலர் பற்றுவது ஒன்றுமட்டும்** தெரியும். **அதுவே** என் துன்பம் ஒழிப்பது, கவலைகளை நீக்குவது, என நாமும் அவ்வாறே அம்பாளின் அடிமலர்களைப்பற்றி முறையிடுவோமாக.

அம்பாளுடைய கருணையையருந்து தான அறிந்தவாறு லகுஸ்தவம்) பாடிய பக்தர், எதையோ பார்த்துவிட்டுச் சட்டென்று பயந்து ஒருவன் தான் அறியாமலே ஐ ஐ என்றும் என்ற எழுத்துச் சேர்க்காமல், சொன்னானாக அவனுக்கும் உனதருள் கிடைத்துவிடுகிறது. அவன், **அமுதமொழி மழைபொழியும் காளமேகம்** ஆகிறான், என்கிறார். மேலும்

தபசு இல்லாமலே பலன் தரக்கூடியது உன் திரு நாமம். உனருளிருப்பின், பசு என்ற சொல்லும், மலை என்ற பொருளில் வந்துவிடும். கவலை ஏன்படுகிறீர் என்கிறார். பின்னும்,

புத்தகமும் அபயத் திருக்கையும், ஜபமாலையும், வரந்தரும் கையும், கொண்டவளாகியும், கர்ப்பூர வெண்ணிற மேனியும், செந்தாமரை இதழ்க் கண்களும், வெண்டாமரை நிறச் சாயலும், உடையவளாகியும், காட்சியளித்து நீ சிரசில் நின்று அமுத தாரையால் சிரசினை நனைப்பவளாக யார் உன்னைத் தியானஞ் செய்யவில்லையோ அவர்களுக்குக் கவிதை இயற்றுஞ் சக்தி எங்கிருந்து வரும். அவ்வாறு உன்னைத் தியானம் செய்பவர்க்கு, எழுத்துச்சரிப்பு நன்கு அமைந்த பதங்கள் கொண்ட நல்வாக்கு, இடைவிடாது கங்காப் பிரவாகம்போல் வந்துகொண்டேதான் இருக்கிறது, என்கிறார். மேலும்,

மின்னொளி வீசும் தங்கத் திருந்தோடும், தங்க வங்கியும், தங்க வொட்டியாணமும் அணிந்துகொண்டு தங்கள் முன் காட்சியளிப்பவளாக உன்னை மனத்து ஊன்றிய நாட்டத்துடன் யார் தியானஞ் செய்வரோ அவர்களுடைய வீட்டில் யானைகளை வைத்துக்கொள்ளும் அளவில், செல்வங்கள் மேன்மேலும் பெருகும் என்கிறார். மேலும்,

சாதாரண அரசர் குலத்துப் பிறந்தவனான ஸ்ரீவத்ஸராஜன், உலகெலாம் ஒரு குடைக்கீழ் ஆளும் மன்னர் மன்னனாகி வித்யாதரர்களும் தன் கழல்களில் விழுந்து வணங்கும் பாக்கியத்தைப் பெற்றது, அம்பிகையே உன் திருவடித் தாமரை அருளிய பயனாம் என்று பாராட்டுகிறார்.

அம்பிகையே உன் திருப்பாத மலர்களின் திருப்பூசைக்கு எவர் வில்வம் பறிக்க மரத்தேறி வில்வ இலைகள் பறிக்கையில், வில்வ முள்ளுகள் கையில் குத்தவும் விடாது வில்வம் எடுப்பார்களோ அவர்கள், தண்டரேகையும், அங்குசரேகையும், சக்கிரரேகையும், வில்ரேகையும், வச்சிரரேகையும், ஸ்ரீவத்ஸ ரேகையும், மச்சரேகையும் கொண்ட, செந்தாமரை மலர்க் கைகளுடன், அகில உலகும் ஆளப் பிறந்தவராய்ச் செங்கோல் ஒச்சுவர் என்கிறார்.

அம்பிகையே! அந்தணர்கள் உனக்குப் பாலைப் படைத்து வழிபட்டு இடையூறு சிறிதும் அடையாமல், தாம் விரும்பியவற்றை விரைவில் பெற்று மகிழ்கிறார்கள்.

*அரசர்கள் உனக்கு நெய்யை நிவேதித்தும், வணிகர்கள் உனக்குத் தேனைப் படைத்தும், மற்றையோர், உனக்குக் கள்ளைப் படைத்தும், உன்னைக் குலதெய்வமாகக்கொண்டு கும்பிட்டு அபீஷ்ட சித்திகள் அடைகிறார்கள் என்கிறார்.*

*அம்பிகையே! உலகத்துள்ள அறிஞர்கள், தாம் அரண்மனைக்குச் செல்லுங்காலத்து உன்னை* **இலக்குமியாக***த் தியானித்தும், போருக்குப் போகுங்காலத்து* **ஜயையாக***த் தியானித்தும், வழியில் நடக்கும்போது* **க்ஷேமங்கரியாக** *நினைத்தும், முரடர், யானை, பாம்பு எனு மிவற்றால் பயம் நேரிடும், மலைகளிலும் அடர்ந்த காடுகளிலும் செல்லும்போது* **சபரியாக** *நினைத்தும், பூதம், பிரேதம், பிசாசு, நரி, எனும் இவற்றால், பயம் உண்டானபோது* **மகாபைரவி** *யாகச் சிந்தித்தும், தண்ணீரில் போகும்போது* **தாரையாக***த் தியானித்தும், மனக்கலக்கம் ஏற்பட்டபோது* **திரிபுரையாக***த் தியானித்தும், அவ்வத் துன்பங்கள் நீங்கி இன்பம் அடைகிறார்கள், என்கிறார்,* **சர்ச்சாஸ்தவத்தின் ஆசிரியர்.**

*அம்பிகையே! உன் திருவடி மலர்த்துகள் பட்ட நெற்றி கொண்டவரான எத்தனையோ புலவர்கள் மகா மேதாவிகளாய் மூவுலகங்களிலும் கீர்த்தி பெற்றிருக்கிறார்கள் என்கிறார்.*

*அம்பிகையே! உன் திருவடித் தாமரைகளின் அருள் குபேர சம்பத்துத் தரும், வசியப்படுத்தும், நட்பு உண்டாக்கும், அறியாமை நீக்கும், அறிவொளி தரும் என்கிறார்.*

*அம்பிகையே! எவன் சரசுவதி ரூபமான உன் திருவடிகளை முழு நிலவொளிபோல் வெண்மைநிறங் கொண்டிருப்பதாகத் தன் சிரசில் தியானத்தில் பார்க்கிறானோ அவனுக்குத் தெளிவாய் இனிய மொழிகள் பொருட்சுவையுடன் வாயில் வந்துகொண்டிருக்கின்றன என்கிறார்.*

*தாயே! எவன் உன்னையே தொழும் பக்தனாய் மனத்துக் கல்மஷம் இல்லாமல், உன்னை முழு நிலவொளி மேனியள் ஆகத் தியானிக்கிறானோ அவனுக்கு நீ கொஞ்ச நாட்களுக்குள் குற்றஞ் சிறிதுங் கண்டு சொல்லமுடியாத சொற்பொழிவுத் திறமையை நீடித்து இருக்கும்படி அருளுகிறாய் என்கிறார்.*

*அம்பிகையே! எவர்கள் உன்னைத் தியானிக்கும்போது நெற்றிப் பக்கத்துச் சந்திரகலைபோல் உலகெலாம் விளக்கும் ஒளி கொண்டவளாகப் பார்க்கிறார்களோ அவர்கள் உடனே புலவரும் கவிகளும் ஆகிவிடுகிறார்கள். நீ உன் பக்தர்களுடைய குடும்பத்துக்குக் காமதேனுபோல் கேட்ட பொருள்களைக் கேட்ட சமயங்களில் கேட்ட இடங்களில் அருளி வருகிறாய்.*

நீ ஜனங்களுடைய அநேக விதமான கஷ்டங்களை யெல்லாம் நீக்குகிறாய் என்கிறார்.

தாயே! உன்னை மாதுளம்பூ நிற மேனியளாக யார் தியானிப்பார்களோ அவர்கள் அங்கவீனராயினும், அழகிலாதவராயினும், மன்மதனையும் கலக்கமுறச் செய்யும், அழகு வாய்ந்தவர் ஆகிவிடுவர், என்கிறார். உன்னைத் தொழுபவனுக்கு நினைத்தன நிறைவேறும். உன்னைத் தொழுபவனை அரசரும் புகழ்வர், என்கிறார் **கடஸ்தவத்தின் ஆசிரியர்.**

அம்பிகையே! எடுத்த காரியங்கள் யாவற்றிலும், நான் வெற்றியடையவும், எங்கு நோக்கினும் யான் வெற்றி அடையவும் உன் திருவடி மலர் எனக்குத் துணைபுரிக என்கிறார்.

தேவியே! உன்னை ஒருமுறை எவன் வணங்குவனோ அவனை அரசர்கள் பன்முறை வணங்குவர். எவன் உன்னை பூசிப்பனோ அவனைத் தேவர்கள் பூசிப்பர். எவன் உன்னைத் துதிப்பனோ அவனை அனைவரும் புகழ்வர். எவன் உன்னைத் தியானிப்பனோ அவனை எந்நேரமும், எல்லாரும் மனத்தில் நினைத்துக்கொண்டிருப்பர்.

அம்பிகையே! பைத்தியம் பிடித்தவர்போலவும், பேய் ஏறப்பெற்றவர் போலவும், விடம் ஏறப்பெற்று மயங்கிக் கிடப்பவர் போலவும், மதம் பிடித்தவர் போலவும், மனக்கவலை கொண்டவர் போலவும், பிரிவுத் துயர் அடைந்தவர் போலவும், அலறும் அநாதைகள் போலவும், காட்சியளிப்பவர்களாய் எந்தப் பக்தர்கள் உன்னை த்தியானிப்பார்களோ அவர்களே புண்ணியாத்மாக்கள் மகானுபாவர் என்கிறார்.

அம்பிகையே! உன்னை ஒரு நொடியாயினும் மனத்தில் நினைப்போர்க்கு, அழகும் யௌவனமும், செல்வமும், உடனே வந்துவிடும் என்கிறார்.

தாயே! சந்திரமண்டலத்தின் மத்தியில் முழு நிலவு மேனியளாய் நீ இருந்துகொண்டு அமுதமழை பொழிபவளாக வெண்டாமரை மலர் ஆசனத்தில் விளக்கொளி வீசிக்கொண்டிருப்பவளாய் எவர் உன்னைத் தியானிப்பார்களோ அவர்கள் நோய் எல்லாம் நீங்கப்பெறுவர், துன்பமெல்லாம் ஒழியப்பெறுவர்.

அம்பிகையே! உன்னுடைய திரு உருவத்தை முழு நிலவுத் துண்டுகளால் படைத்தது போலவும், அமுத வெள்ளப் பெருக்கால் செய்யப்பெற்றது போலவும், பாற்கடல் அலைப் பெருக்கால் படைத்தது போலவும், அமுதச் சேற்றின் உருண்டைகளால் செய்யப்பெற்றது போலவும், பனிக்கட்டிகளால் படைக்கப்பெற்றது போலவும், எவர் சிரத்தையுடன் தியானிப்

பார்களோ அவர்கள் மனக்கவலை கொள்ளாதிருப்பர், கஷ்டங்கள் படாமல் இருப்பர், ஆபத்துகளில் அகப்பட்டுக்கொள்ள மாட்டார். அவர்கள் பெருஞ் செல்வர் ஆக வாழ்வர், என்கிறார்.

தாயே! செம்பஞ்சுக் குழம்பில் நனைத்த தாமரை நூல்போல் மெல்லியல் ஆகச் செந்நிற மேனியளாய் நீ இருக்க எவர் காண்பார்களோ அவர்கள் உலகத்தவரைத் தம் வயப்படுத்துவர், என்கிறார்.

அன்னையே! சந்திரமண்டலத்திற்கு மேலாக, வெண்தாமரை மலர் அணையில் பனிக்கட்டி வெண் மேனியளாய் வீற்றிருந்து பிரமனின் முகத்திலும் வாயிலும், அமுத மழை பொழிபவளாக நீ இருப்பதை எவர் தம் தியானத்தில் காண்பரோ அவர்களுக்கு எல்லாத் துறைகளிலும் பேச வாக்கு வன்மை உண்டாம். அவர்கள் வாக்குத் தங்கு தடையின்றி மனங் கவர்வதாய்ச் சொல்லினிமையும் பொருளினிமையும் கொண்டதாய் மிகத் தெளிவாய் வாயினில் வந்துகொண்டிருக்கும் என்கிறார்.

அம்பிகை தன்னை ஒருமுறை நினைத்தவர்க்கு வேண்டியவற்றை அருளுவாள். போகங்களைத் தருவாள். பகைவரை மாய்ப்பாள். துன்பங்களைக் கெடுப்பாள். கவலைகளை எரிப்பாள். நோய்களை நீக்குவாள். இன்பங்கள் எல்லாம் தருவாள். சங்கடங்களை ஒழித்திடுவாள். பிரிந்தவரைக் கூட்டுவாள். நலங்கள் எல்லாம் புரிவாள், என்கிறார்.

தாயே! உன்னை எவன் தியானிப்பனோ எவன் அறிவனோ எவன் தஞ்சமென அடைவனோ எவன் உன்னைக்குறிக்கும் மந்திரத்தை ஜபிப்பனோ எவன் கண்டுகொண்டிருப்பனோ எவன் எப்போதும் நினைப்பனோ எவன் உன்னிடம் மனம் ஈடுபடுவனோ, எவன் உன்னைப்பற்றி அறிய ஆவல்கொள்வனோ எவன் பூசிப்பனோ, எவன் புகழ்வனோ, எவன் உன் பாதாரவிந்தமே கதி எனப் பற்றுவனோ, எவன் உன் தத்துவக் கருத்தை உணர்வனோ, எவன் உன் கதைகளை ஆவலோடு கேட்டு மகிழ்வனோ அவனுடைய வீட்டிலிருந்து இலக்குமி விலகிப் போகமாட்டாள். அவன் போகுமிடமெங்கும் அவன் முன் வெற்றிக்கொடி பறந்துகொண்டிருக்கும், என்கிறார்.

அம்பிகையே! உன்னை நான் நினைக்கும்போது துயரங்கள் எல்லாம் பறந்தொழிகின்றன. உன்னைத் துதிக்கும்போது புகழ் பரவுகின்றது. உன்னை வழிபடுங் காலத்து நினைப்பவை நிறைவேறுகின்றன. உன்னை என் நெஞ்சில் இருத்தும்போது, என் மனம் சாந்தியடைகிறது. நீயே எமன் வாயிலிருந்து உன் அடியார்களை மீட்கிறாய். பாவக் கடலைக் கடந்து போகத் துணை செய்கிறாய், இம்மையிலும் மறுமையிலும் உன் கழல் பிடித்தோரைக் காப்பாற்றி வருகிறாய், என்கிறார்.

அன்னையே! உன் திருவடி மலர் சிந்தூரப் பொடிகள் இலக்குமி தேவியை வசப்படுத்தும் மந்திரப் பொடிகளாகவே இருக்கின்றன. அவை உன்னை வணங்கும் அடியார்களது நெற்றியில் பட்டகாலத்து அவர்களது தலைகளில் பிரமன் எழுதிய துரதிருஷ்ட எழுத்துக்களை அழித்து நலங்களை எல்லாம் அருளுகின்றன, என்கிறார்.

மதியிலிகாள்! ஏன் காயிலை தின்றும், காடுகளில் இருந்தும் நெருப்பில் நின்றும் நீரில் முழுகியும், பூவலம் வந்தும், பட்டினி கிடந்தும், உங்கள் உடம்பை வீணாக வாட்டிக்கொள்ளுகிறீர்கள். ஏராளமாக தக்ஷிணைகள் கொடுக்கப்பட வேண்டிய யாகங்களை எல்லாம் செய்து வீடுகளில் ஒன்றுமில்லாமல் ஏன் பாழாக்குகிறீர்கள். தவத்தாலும், யாகங்களாலும், நீங்கள் அடையும் சுக போகங்களை அம்பிகையினிடத்துப் பக்தி செலுத்தி யாதொரு துயருமில்லாமல் எளிதின் அடையலாம். நுமக்கு வழி காட்டிக்கொண்டு இலக்குமி தேவி உமமைத் தொடர்நது முன் சென்றுகொண்டிருப்பாள், எனகிறார்.

எவரிடத்தும் பிச்சை கேட்கப் போகமாட்டேன், எவர்களையும் ஏமாற்ற மாட்டேன், எவர்களிடமும் அடிமையாய்ப் பணி செய்துகொண்டிருக்க மாட்டேன். சுகமனுபவிப்பதற்கு எவ்வகையிலும் மனக்குறைகொண்டிருக்கவில்லை, பாலாவி போன்ற மெல்லிய ஆடைகளையே உடுத்தி மகிழ்கிறேன். இனிய பண்டங்களையே உண்டு மகிழ்கிறேன். என் மனைவியோடு இனிது இன்பம் நுகர்கிறேன். என் மனத்தில் என் காமதேனுவான காமகோடியம்மையார், வீற்றிருந்து நிலவிவருகிறார், எனக்கு இனி என் கவலை.

துன்பமே இயற்கை என்னும் சொல்லை மறந்திடுவோம் **இன்பமே வேண்டிநிற்போம்** யாவும் அவள் தருவாள், என்கிறார் **அம்பாஸ்தவத்தின் ஆசிரியர்.**

அம்பிகையே! இந்த ஜன்மமே கடைசி ஜன்மமாகப் பெற்ற மனிதனுக்குப் புண்ணிய பாவங்கள் சமமாக நொடிக்குள் பாவமனைத்தையும் பிளந்தெறிகின்ற, சிவதீக்ஷையானது குருமூர்த்தியாக நீ விளங்க, த் தேசிகனது கடைக்கணின் நோக்கால் இரக்கத்துடன் கிடைக்கின்றது என்கிறார், அம்பாஸ்தவத்தின் ஆசிரியர்.

தாயே! எந்த பக்தனுடைய மனத்தில் முத்துமாலை பூண்டவளாகவும், பவழ மேனியளாகவும், விண்மீன்களுடன் தோன்றிய செவ்வானம் உற்ற முன்னந்திமாலைபோலக் காட்சியளிக்கிறாயோ அந்த பக்தன் ஐந்து மலர் அம்புகள் இல்லாமலே மன்மதனாகி விடுகிறான், என்கிறார்.

தாயே! எவர் உன்னை அமுத கிரணங்களால் உலகத்தைக் குளிர்விக்கிற **அமிருதேசுவரியாகத்** தியானிக்கிறார்களோ அவர்கள் பிரமன் முதலான தேவராலும கடந்து பார்த்தற்கு முடியாத அத்தனை நெடுங்கால வெல்லையும் கடந்து வாழ்கிறார்கள் என்கிறார்.

அன்னையே! எவன் உன்னைப் படிகமாலையும் சுவடியும், கரகமும், சின்முத்திரையும், கொண்டவளாகியும், கூதிர்ப் பருவ நிலவனைய மேனி உடையவளாய்த் தாமரைப்பூ வாதனத்தில் வீற்றிருப்பவளாகியும் மனத்தில் இருத்தி உன்னைப் பார்க்கிறானோ அவன் உலகினுக்கே கவிச்சக்கிரவர்த்தி ஆவன், தருக்க சாஸ்திர சக்கிரவர்த்தியும் ஆவன்.

அம்மா! நீ மதியில் நிலவு, சூரியனிடம் காந்தி, நீ மனிதரிடம் பகுத்தறிவு, காற்றில் வன்மை, நீ நீரில் இனிமை, நெருப்பில் வெம்மை, நீ இராவிடில் எல்லாமும் பயனற்றனவாகும என்கிறார்.

அன்னையே! வானத்தில் கிரகங்கள் பெயர்ந்துகொண்டிருக்கின்றன, முகில் மழை பொழிகிறது, ஆதிசேடன் பூமியைத் தாங்குகின்றனன், காற்று வீசுகிறது, நெருப்பு கொழுந்துவிட்டெரிகிறது. அவை அனைத்தும் உன்னுடைய ஆணையால் நடைபெறுகின்றன, என்கிறார்.

தாயே! சாமர்த்தியசாலிகள் இவ்வுலகின்பம் அனுபவிப்பதற்கு உன்னை வணங்கி வழிபட்டு இலக்குமிகள் கோடிகோடியரையும், புருவ நெறிப்பு அறிந்து குற்றேவல் செய்யும் ஏவல் மகளிராக்கி, இப்பூவுலகில் இன்பம் நெடிது நுகர்ந்து அவ்வுலகில் சிந்தாமணி மலையினை உடைய கற்பகப் பூங்காவனத்து நெடுநாள் இன்புற்று வருகிறார்கள், என்கிறார்.

அம்பிகையே! ஜீவான்மாக்களது சமுசாரக் கடுந்துயர் பலவும் போக்குதற்கு நீயே உரிமையும் படைத்து வல்லமையும் படைதது இருக்கிறாய். வெயிலும் தன் வெம்மையைத் தணிப்பதற்குத் தானே மழை பெய்வித்துக்கொள்கிறது.

லோகசரண்யையே! மதவாதிகளுடைய தருக்கப் பேச்சு வல்லமைகள் எல்லாம், உன் பாதகமலங்களை அடையும்வரையில் கோணல் வழிகள் கொண்டனவாயும், விகற்பங்கள் பின்னியனவாகியும், ஒழியாது பெருகுகின்றன, என்கிறார், சகலஜனனிஸ்தவத்தின் ஆசிரியர்.

தாயே! மக்கள் தேவர் விலங்குகள் என்ற இம்மூவுலகும், சமுசார சாகரத்தில் முழுகியுள்ளன. சததுவ ரஜஸ்தமோ குணங்களாகிய பெரிய அலைகளின் மேற்பாகததில் புரண்டு உருண்டு தத்தளிக்கின்றன. இந்நிலையில் உன் கருணைக் கடைக்கண்ணின் நோக்கு எந்த உயிரிடம் விழுகிறதோ அந்த உயிர் உடனே பரமானந்த வடிவான சரீரத்தைப் பெற்று இன்புறுகிறது, என்கிறார்.

அகிலாண்டங்களுக்கும் அன்னையே! உன்னை ஒருமுறை நினைத்தவர், பிறவிப் பெருங் கடல் நீந்தி சிவசிந்தாமணி உலகு செல்கிறார்கள். இவ்வுலகில் இன்பமெல்லாமும் நுகர்கிறார்கள், உன்னைத் தொழுபவர்களுக்கு மறு பிறவி கிடைப்பினும், அப்பிறவி இன்பந்தரும். மோக்ஷம் கிடைப்பினும் கிடைக்கும். எது கிடைத்தால் என்ன. இரண்டும் நலமே என்கிறார்.

அன்னையே! பிரமன் தலையைச் சிவன் கையில் ஏந்தியதும், திருமாலின் உடலைத் தோளணியாகச் சிவன் அணிந்ததும், நஞ்சினை உண்டு கழுத்தினில் அது தங்கச் சிவன் பண்ணிக்கொண்டதும், இவையும் பிறவும் ஆகிய எல்லாமும், சிவ சக்தியாகிய உனது திருவிளையாடல்களே என்கிறார்.

தாயே! உன்னையே தெய்வமாகக் கொண்ட சாக்த மதத்தைத் தழுவாதவன், சரீரத்தைப்பற்றியும் ஜீவனைப்பற்றியும் நன்கு இவை இத்தன்மைய என்று அறிந்தவனுயினும் சரீர அகங்காரத்தை விட்டொழிப்பதற்கு வல்லமை பெற்று நிற்கமாட்டான் என்கிறார்.

தாயே! உன் பக்தனுடைய ஹிருதயத்தில் உன் ஒளிகளின் சிறு பரம அணுக்களாகவே சூரியன் சந்திரன் அக்கினி முதலிய சோதிகள்

தெரிகின்றன. உன் பக்தனுக்குப் பிரம ஆனந்தமானது, மிக அற்பமாகக் காணப்படுகிறது, ஏனெனில் அது உன்னைக் கண்ட ஆனந்தத்தில் பல் கோடியில் ஒரு கூறு ஆகிறது. உன் பக்தனுக்குச் சிவ தத்துவம் முதல் மண் தத்துவம்வரை எல்லாம் உன் திருவயிற்றில் அடங்கியனவாகக் காணப் படுகின்றன. நான் என்ன சொல்ல முடியும். நீ பல் வகைகளில் உன் பக்தனுடைய மனசில் ஆச்சரியமூட்டுகிறாய், என்கிறார், சக்தி மகிம்ன ஸ்தோத்திரத்தின் ஆசிரியர்.

தாயே! உன்னருள் பெற்றவனுக்கு வேதங்கள் முதலான பதி னெட்டு வித்தைகளும், 64 கலைகளும், பற்பல தேச பாஷைகளும், விலங்கு முதலாயவற்றின் பேச்சுகளும் யாப்புக்களும், எழிசைகளும், ஐந்து பெருந் தாளங்களும், பதங்களையும், வாக்கியங்களையும், அளவிடும் விற்பன்ன ஞான மும், யாதொரு முயற்சியுமின்றி உண்டாகி விடுகின்றன. உன்னருள் பெற்றவன் சர்வக்ஞனாகி சொல் தெய்வம் வாழும் முகமுடையவனாய் இந்தி ரன் முதலானவர்களுடனும் போட்டியிடுகிறான்.

உன்னருள் உன் பக்தனுடைய சகல அபீஷ்டங்களையும் நிறைவேற்றுவ தாகித் தன் வல்லமையைக் காட்டுகிறது. அறியாமை இருளினுக்கு ஒரு பெருஞ் சூரியனாகி ஒளிபோன்ற ஞானத்தைத் தருகிறது. உன்னருள் பிரமனுக்கும், திருமாலுக்கும், இந்திரனுக்கும் வேண்டிய அளவு அபீஷ்ட, சித்தி கிடைக்கச் செய்வதில் ஓர் உறுதிகொண்டுளது. உன்னருள், பாட்டு வெள்ளப் பெருக்கு அலை எழுந்து ஓங்கிப் புரண்டோடச் செய்கிறது.

தாயே! உன் பக்தனுக்கு உன் அருளுருவத்து ஒன்றாய்க் கலந்து இன்புறும் பேறு விரைவில் உண்டாகிறது. உன் பக்தன் எண்ணியன யாவுமே நிறைவேறுகின்றன.

தாயே! சாதாரணப் புலவர்களுடைய காவியங்கள் படித்தாலும் என்ன? தொட்டதற்கெல்லாம் உரக்க-இதற்கு இது இலக்கணம் என்று எடுத்துக் காட்டும் இலக்கண நூல்களாலும், பயன் என்ன? பலவும் அறிந்த-நடமாடும் மனித உலகப் பேர் அகராதியாகப் பேர் வாங்கினாலும் என்ன? இவற்றாலெல்லாம் அவர்கள் நல் இசைப் புலவர் எனப் புகழ் பெற முடியாது. தாயே! உன் திருவடி மலர்களின் வழியையே பரிசுத்தம் எனக் கருதிப் பின்பற்றி நடந்து வருவோனே உலகில் நல்லிசைப் புலவனா கப் புகழ்பெற முடியும்.

அம்மா! உன் பாதார விந்தங்களை இடைவிடாது சேவித்து வருபவ னுக்கு, வீடு சுவர்க்கமாகும். இறுமாந்தவன் வணங்குவன். இல்லறமே முக்தி தரும். பகைவன் நண்பனாவன். பாவம் புண்ணியமாக மாறும். அரசரும் அடிவிழுந்து வணங்குவர். உயிர் கொண்டுபோக வரும் யமன் உயிர் மேலும் தந்து நூறு பிராயம் வாழ்ந்திடச் செய்யும் காயகற்ப வைத்தி யன் ஆவன். பழிச்சொல் புகழாம். எல்லாம் நலங்கட்கே ஆம். அவன் இவற்றினும் வேறு என்ன பெறவேண்டும்.

தாயே! பிறவித்தளை அறுத்துவிடுவதாகிய உன்னருள் பெற்றால் அல்லாமல், அஞ்ஞான இருள், ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டுகின்ற-பல் வேறு மத முடிவுரைகளால் சிறிதும் நீங்காது. நக்ஷத்திரங்களால் இருட் டனைத்தும் விலகுமோ, என்கிறார்.

அன்னையே! உடம்பை அணு அணுவாய் அரித்துத் தள்ளிக் களைப் புறச் செய்யும், விரதங்கள் தரும் பதவிகளும், பலவித தானங்கள், ஹோமங் கள், ஜபங்கள், தர்ப்பணங்கள், அசுவமேதம் முதலான நல்ல உயர்ந்த யாகங்கள் என்னும் இவைகள் எல்லாம் தரும் பதவிகளும், இங்குச் சொல் லப்படாத பல்வேறு வகை நல்வினைகள் தரும் பதவிகளும் - உனது திருவடி மலர்ப் பேரின்பந் தரச் சிறிதும் சக்தி கொண்டவைகள் அல்ல, என்கிறார்.

தாயே! உன்னருள் பெற்றவன் கிழவனாயினும் குமரன் ஆகி அழக னும் ஆய்விடுவான். இந்திரன் செல்வமெல்லாம் குப்பையிற் போடுக எனச் சொல்லுமாறு அஷ்ட லக்ஷ்மிகளும் நித்ய வாஸம் செய்யும், ஓர் இடமாகும் பாக்கியம் பெறுவான். மன்னர்களது முடி மாலைகள் படும் கழல் அணிந்த காவலன் ஆகிவிடுவான்.

தாயே! நீ யாருடைய கிருகத்தில் கிருக தெய்வமாய் விளங்கி வருகி றாயோ அவர் தம் வீட்டில் இந்திரன் பெற்றிருக்கும் பெருஞ் செல்வத்தை யும் விட மிகுந்த செல்வங்கள் பெருகுகின்றன. அவர்கட்கு நல்ல புகழ், மூன்று உலகங்கட்கும் தெரிவதாய்ப் பரவுகிறது.

அன்னையே! உன்னருள் மிகுந்த பயத்தைப்போக்கும், தரித்திரத்தை நீக்கும், சர்வக்ஞனது அறிவைத் தரும், உன் திருவடி இலச்சினையை முடி யில் பதியச் செய்யும், கிழத்தனத்தை நீக்கும், சாகாவரம் அருளும். உன் னருள் பெற்றவன் எல்லாப் பாவங்கட்கும் காட்டுத் தீ ஆகிறான், எண்ணிய வற்றை எண்ணியவாறு பெறுகிறான், பல்வகைச் சம்பத்துகளையும் தேவைக் குமேல் பெறுகிறான், தனக்கு ஈடும் எடுப்பு மிலாதபடி இனிது வாழ்கிறான், புலவர் கூட்டம் தன்னைக் கண்டு வணங்கவும் புகழவும் பெறுகிறான், பகை வர்களை அழிக்கிறான், மனதில் எல்லாக்களையும் உணர்கிறான். உலகிற்கு வியப்பூட்டுவனவும், சந்திர பிம்பம் போன்றவையும் ஆகிய புதுப் புதுப் பதங்களால் சொல் மாரி பொழிகிறான், முகத்தில் பால சூரியனுக்கு ஒப் பான தேஜஸைப் பெறுகிறான், வசீகரமான உடலமைப்புப் பெறுகிறான், வேதங்களில் கூறப்பெற்றதும், அனுசரிக்க முடியாததும், ஆன யோகமார்க் கத்தைப் பெறுகிறான், யோகமார்க்கம் பெற முதற்படியாயுள்ள பக்தி மார்க் கத்தையும் பெறுகிறான். பிரமன் விதிப்படி வேதங்களிற் கூறிய நூறு பிராயமும் வாழ்ந்து வருகிறான், எண்டிசையிலும் நல் இசை பெறுகிறான், இறுதியில் உன் திருவடி நிழலில் இனிது உறையத் தகுதி பெறுகிறான், என்கிறார்.

அன்னையே! எந்த பக்தனிடத்தில் உன்னுடைய பார்வை புன்முறு வலுடன் விழுகிறதோ அந்த பக்தனுக்குத் திராக்ஷைக்கும் தேனுக்கும் உள்ள கருவத்தை அடக்குவதாய இனிய வாக்கு நொடியுள் உண்டாகிறது, என்கிறார், மூககவி.

அன்னையே! தேனினிமையைத் தாழ்ந்தது என்று சொல்லத்தக்க, சுவை வாய்ந்த சொற்பெருக்கும், உலகு நிறைந்த புகழும் மன்மதனை ஜயிக் கும், உரு அழகும், மனசுக்கு உகந்த இவ்வுலக போகமும், மனிதர்களுக்கு உன் கடைக்கண் பார்வையால் அல்லாமல் எப்படி உண்டாகும், என்கிறார்.

தாயே! உன்னை வணங்கும் முதல் நாளிலேயே உண்டாகும், மதுர கவி யாடும் திறமையாகிய சூரியன் எதிரிகளுடைய - போற்றத்தக்க கவிதா சக்தியாகிய ஆம்பலை மிக விரைவில் குவியச் செய்கிறது என்கிறார்.

என்மனவுறுதி உன்னிடத்தில் இருக்கட்டும். போற்றத்தக்க சொல் வெள்ளப் பெருக்கு என்னுடைய முகத்தில் உண்டாகட்டும். எங்களுடைய எதிரிகளிடத்தில் மூடத்தனம் உலாவட்டும். புத்தியைத் தருபவளே! என் னிடத்தில் உன்னுடைய கருணை விருப்பத்தின்படி விளங்கட்டும் என்கிறார்.

என்னுடைய ஆபத்தெல்லாமும் நீங்க உன்னுடைய கடைக்கண் பார்வை ஒரு நொடி என்மீது படட்டும். எனக்கு எப்பொழுதும் விருப் பத்தின்படி என் வாயில் கங்கையாற்று அலைகளைக் கீழ்ப்படுத்தும் சொல் வெள்ளப் பெருக்கு குதிகொண்டு துள்ளித் துளும்பி ஓடட்டும் என்கிறார். உன்னுடைய பார்வை என் நோய்களைத் தணிக்க என் முன் படட்டும். இந்த ஒரு வேண்டுகோளை அங்கீகரி. என் அஞ்ஞான இருளை உடனே நீக்கவேண்டும். என்னைப் புலவர் உலகினில் சேர்ப்பிக்க வேண்டும்.

தாயே! உன் திருவருளால் கவிகளுக்கு மிக மிக உண்டாகும், சொல் வெள்ளப் பெருக்கு ஒழுங்கு, தேனைப் பழித்துக் கங்கையின் வெற்றிக்கொடி போலப் பறக்கும் என்கிறார்.

அம்பிகையே! உன் பாத கமலங்களில் செய்த வணக்கம் செல்வந் தரும், கல்வி தரும், எண்டிசையும் எட்டும் புகழ் தரும், நல்ல புதல்வனைத் தரும், மூவுலகிலும் ஆணை செலுத்தும் தலைமையையும் தரும், பாவங்களை நீக்குபவளே! எந்த நன்மையைத்தான் செய்யாதிருக்கும் எல்லா நன்மை களையும் செய்யும் என்கிறார்.

காமகோடியே! எந்த மூடனிடமாவது எந்தப் புலவனிடமாவது, முழு மூடத்தனத்தையும் போக்கும், உன் கடைக்கண் பார்வை படிந்ததா னால், அவனைக் கண்டதும், இந்திரன் முதலான தேவர்களும், கைகளைத் தம் கிரீடங்களின்மேல் குவித்தவர்களாய் எப்படி நமஸ்காரம் என்று சொல்லா திருப்பார்கள், என்கிறார்.

காமாக்ஷியே! தலைமுறை தலைமுறையாக ஏழைகளாக இருப்பவ ரும், பார்ப்பதற்கு மிக விகாரமானவர்களும், முழு மூடராய் இருப்பவரும், உன்னுடைய கடைக்கண் பார்வையைப் பெற்றால், செல்வத்தில் இந்திரர் ஆவர், அழகில் மன்மதர் ஆவர், வாக்கினில் தேன் சொட்டப் பேசுவர் என்கிறார்.

மாகேசுவரியே! உன் கடைக்கண் பார்வை விழப்பெற்ற பாக்கிய சாலிக்கு, த் தேவர்கள் ஏவல் கேட்பர், அப்பாக்கியவானது அழகு மன்மத னுக்குப் பொறாமை யுண்டாக்கும், அப்ஸரஸ்களுடைய கூட்டம் உண்டா கும், வார்த்தைகள் பரிமளிக்கும், வயசு காளைப் பருவமாகியே தோன்றும், ஏழைக்கும் இவ்வித போகபாக்கியங்கள் உண்டாகும்.

அன்னையே! உன் கடைக்கண் பார்வை விழப்பெற்ற புண்ணியாத் மாக்களுக்கு, ச் சரசுவதி கூடவே இருக்கும் தோழியாவாள், இலக்குமி தவறாது புருவ நெறிப்புப் பொருள் குறிப்பு அறிந்து ஏவல் கேட்பள், உல கங்கள் எல்லாம் வீடுகளாம், வடிவழகு மூவுலகங்களின் கண்களையும் கவர்வ தாய் மோகனமாய் அமையும் என்கிறார்.

அம்மா! உன் கடைக்கண் பார்வை விழப்பெற்ற அந்நொடியிலேயே, பார்த்ததும் முகங்கவிழ்த்து இருக்கும் ஊமையனுக்கும் ஸர்வக்ஞதை (அறிவு) ப் பெண், எல்லா வுலகங்களின் கண்ணெதிரிலேயே சுயம்வர மாலை யிடுகிறாள், புகழ்மடந்தையும் அம்மாலையிட்டு மகிழ்கிறாள், என்கிறார்.

தாயே! உன்னுடைய ஒரு நொடிப் பார்வை, ஒருமுறை உன்னை வணங்கும் மனிதனுக்கும், உலகம் புகழும் அக்கீர்த்தியையும், நன்மதிப்பையும், சபையில் கூர்மையான நுண்புத்தியையும், தேன் ஒழுக்குப் போன்ற வாக்கினையும், செல்வத்தையும், கோடி கோடி மடங்கு பெருக்கிவிடுகிறது என்கிறார்.

தாயே! உன் கடைக்கண் பார்வை விழத்தொடங்கிய காலம்முதலாகவே பிரமனைப்போல் ஆகிவிடுகிறான் ஊமையனும், மன்மதனேயாகிவிடுகிறான் விகாரமான மனிதனும், தேவேந்திரனாகிறான் துரதிர்ஷ்டசாலியும் உன் பாதாரவிந்தங்களின் பெருமையை எங்ஙனம் யான் சொல்லமுடியும்' என்கிறார்.

காமகோடியே! உன் கடைக்கண் பார்வையாகிற இளவேனில் மங்கை, புலவருடைய புத்துரை நடை மாந்தோப்புகளில், கவி கோகிலங் (குயில்) கள் பாராட்டும் தேனின் ஒழுக்கினையும், கமழும் நன்மணத்தையும், தடை சிறிதுமின்றிப் பெருகச் செய்கிறாள் என்கிறார்.

தாயே! கருணை நீர் சொரியும் உன் கடைக்கண் முகில், புண்ணியவானுடைய சொல் வெள்ளப் பெருக்கினை எளிதாகக் கரைபுரண்டோடச் செய்து யமுனையாற்று அலைகளின் அழகையும், மட்டம் என்று சொல்லச் செய்கிறது என்கிறார்.

அன்னையே! உன் கடைக்கண் பார்வை பத்திச் சுவை அறியாதவன் மீது விழாது, அஞ்ஞானியின மீதும் படாது, இறுமாந்தவனுக்கும் கிடைக்காது, சாஸ்திரங்கள் ஓதாதவனுக்கும் கிட்டப்பெறாது, உண்மை பேசாதவனுக்கும் கிடைக்காது, மோக்ஷ சமீபத்துக்குப் போகாதவனுக்கும் காணப் பெறாது என்கிறார்.

அம்மா! உன் புன்னகைக்கும், பாற்கடலுக்கும் சிறிது வேற்றுமை உள்ளதென்று சொல்கிறோம். இரண்டும் வெண்மைக்கு உற்பத்தி ஸ்தானங்களே. ஆயினும் அப்பாற்கடல் எப்பொழுதோ முன் ஒரு நாள் ஒரு புருஷனுக்கு இலக்குமியைப் பெற்று அளித்தது. உன்னுடைய இந்தப் புன்னகை எப்பொழுதும் எல்லாருக்கும், பலதடவைகள் செல்வத்தையும், சரசுவதீ விலாஸத்தையும், தந்துகொண்டிருக்கின்றன. உன புன்னகை அளவற்ற இலக்குமிகளைப் படைத்து அளிக்கிறது. மேலும் இலக்குமிகளோடு சரசுவதிகளையும் தருகிறது என்கிறார்.

தாயே! இனிமைக்கு உலாவும் மண்டபமாக இருக்கும் உன் புன்னகை என் பேச்சில் இனிமை ஒழுகச்செய்யவேண்டும். குளிர்ச்சி முத்திரையாகிய உன் புன்முறுவல் என் மனங் குளிரச் செய்யவேண்டும். வெண்மையொளி தவழும் உன் புன்முறுவல் என் புகழ் எண்டிசையும் பரவச்செய்ய வேண்டும், என்கிறார்.

அன்னையே! தங்கக் கம்பி நிறத்தளாயும், காதுகளில் அசையும் இரு தோடுகள் அணிந்தவளாயும், புன்னகை பூத்தவளாயும் நீ இருப்பதாக உன்னை யார் தியானஞ் செய்வார்களோ அவர் பூமியில் குபேராய் விளங்குவர் என்கிறார்.

தாயே! உன் திருவடித் தாமரை மலர்களின் மகிமை வணங்கியவர்களைப் பிரம விஷ்ணு சிவர்களாகச் சாரூப்பிய பதவி அடையச் செய்கிறது.

உன் பாதார விந்தங்களை நினைத்தபோதேயே முழு மூடர்களுக்கும், மந்தர மலை மத்தினால் சுழலக் கடையப்பெற்ற தருணத்துக் குபுகுபுவென்று பொங்கி எழுந்த பாற்கடலுக்குப் போட்டியிடுபவைகளாக, த் தெளிந்தனவாய் வலியவே உதடு துடிக்கும் நிலைகொண்டனவாக இயற்கை நயமுடைய இன்மொழிகள் எண்ணியபடி வாயிலிருந்து வந்துகொண்டிருக்கின்றன என்கிறார்.

அன்னையே! உன் பாதாரவிந்தங்களில் இனிது மனமுவந்து செய்த நமஸ்காரம், சரண்புகுந்தவனுக்குப் புகழைத் தருகிறது. மதுர கவி பாடும் திறமையை அளிக்கிறது. இலக்குமீ கடாக்ஷம் பரிபூரணமாக விழச்செய்கிறது. இப்படிப்பட்டதென்று சொல்லமுடியாதபடி ஒருமனச் சாந்தியைத் தருகிறது. பாசக்கட்டுக்களை நெக்குவிட்டு நெகிழச் செய்கிறது. என்ன என்ன செய்யவில்லை. நன்மை எல்லாம் செய்கிறது, என்கிறார்.

**ஆதி சங்கரர் தம் சௌந்தரிய லகரியில்.**

அம்பிகையே! உன் திருவருள் துணை இல்லாவிடில் அம் மும்மூர்த்திகளும் முத்தொழில் செய்ய முடிவதெங்கே. உன் சக்தி விளங்காதபோது அவர்கட்கு அசையவும் முடியாதே. அவர்கள் தம் தொழில்கள் செய்ய உன்னையன்றோ வழிபட்டு வணங்கி ஆராதிக்கின்றனர் என்கிறார்.

அன்னையே! உனது ஒரு நொடி அசைந்த கொடிப் புருவங்களது குறிப்பின் ஆணை அறிந்து நான்முகன் உலகினைப் படைக்கிறான். திருமால் உலகினைக் காக்கின்றனன். உருத்திரன் சங்காரம் செய்கின்றான். ஈசன் மறைந்துவிடுகிறான். சதாசிவன் அருளுகின்றான். ஐந்து தொழில்களும் உன்னாணை வழியானன்றோ நடந்தேறி வருகின்றன என்கிறார்.

பவானியே! அடியேனைக் கடைக்கண்ணால் பார்த்தருள வேண்டும் என்று முறையிட விரும்பிப் பவானியே! என்று சொல்லி வாய்மூடுவதற்குள் நீ அந்த பக்தனுக்கு முகுந்தப் பிரமேந்திராதி தேவர்களுடைய முடிகளால் நீராஜனம் செய்யப்பெற்ற திருப்பாதங்களுடைய உனக்கு உரிமையாயுள்ள மோக்ஷ பதவியைத் தந்து இன்பத்துள் திளைத்து முழுகியிருக்கச் செய்கிறாய் என்கிறார்.

உன் பாதாரவிந்தங்கட்குச் செய்த பூஜை மும்மூர்த்திகளுக்குஞ் செய்த பூஜையாகிறது. அம்மூன்று தேவர்களும், உன் திருவடி மலர் தாங்கும் பீடத்தின் அருகே சிரசில் அணிந்த மகுடங்களுக்கு மேலாகத் தங்கைகளைக் குவித்துவைத்துக் கொண்டவர்களாய் ஏவல் கேட்கக் காத்துக்கொண்டே எப்பொழுதும் உள்ளனரே. உன் மகிமையே மகிமையாவது என்கிறார்.

தாயே! உன்னை வெள்ளை நிற மேனியளாகத் தியானிப்பவர் மோக்ஷ சாம்ராஜ்யத்தைப் பெறுகின்றனர். உன்னைச் செவ்வான நிற மேனியளாகத் தியானிப்பவர் உலகமே தன் சொல் கேட்கச் செய்கிறார்கள். உன்னைப் படிகநிற மேனியளாகத் தியானிப்பவர் கவி பாடும் வன்மையைப் பெறுகின்றனர். உன்னைப் பொன்னிற மேனியளாக நினைப்பவர் பூவுலகிற் குபேராவர். உன்னைக் கருநிற மேனியளாக நினைப்பவர் சௌபாக்கிய மனைத்தையும் பெறுவர். உன்னை நீலநிற மேனியளாய் நினைப்பவர் எதிர்த்து வாதாடுபவரை வெல்வர். உன்னை மஞ்சள்நிற மேனியளாய் நினைப்பவர் பிறரைத் திகைக்கச் செய்வர், என்றெல்லாம் உன்னையறிந்தவர் சொல்கிறார்கள்.

இவ்வண்ணம் அம்பாளுடைய பக்தர்கள் பலரும், **அம்பிகையின் அருளைப்** பலவாறு பரக்க விரித்துரைத் திருக்கின்றுர்கள். அம்பிகையின் பக்தர்கள் ஆக விரும்பும் நாமும், அவளுடைய திரு நாமங்களையும், திரு மந்திரத்தையும், முடிந்தவரையில் படித்தும் ஜபித்தும் வருபவராய், அவளையே இடைவிடாது தியானஞ் செய்து பக்தியுடன் நாள்தோறும் அன்னையை வழிபட்டு ஒன்றையும் விரும்பாது "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என இருந்துவிடின், அன்னையே நம்முடைய பாதுகாப்பின்பொருட்டு, இவ்வுலகத்து இன்பமெல்லாம் வேண்டியவாறு நாம் நுகரத் தாம் அருளப் பொறுப்பு ஏற்று வீட்டின்பமும், தந்தருளுவாள். நாம் நினைக்கும்போதெல்லாம் நம்மருகே அன்னை வந்து துணையாய் இருந்து அவ்வச்சமயங்கட்கு வேண்டியன செய்து அருளுவாள். ஆகலின் **அவள் நம்மைக் காப்பாற்றுவாள்** என்ற நம்பிக்கை கொள்வோம். அம்பிகைக்குப் பணிவிடை செய்யப் பாக்கியம் செய்திருப்பதே நாம் பெறும் பயன் என எண்ணி அன்னையினிடமே அடைக்கலம் புகுந்து கவலையற்றிருப்போம்.

தாயே! உன் சந்நிதி யில்லாத இடம் எங்கட்குப் போக நேரவேண்டாம் என்று வேண்டுவோம். உன் மகிமை கொண்டிராத நூல்கள் எங்கட்குப் படிக்க நேரவேண்டாம் என்போம். எங்கள் குடும்பத்து, உன் திருவடி மலர் அன்பில்லாதவர் எவரும் இருக்க நேரவேண்டாம் என்போம். உன் நினைவு இல்லாத வாழ்நாள் எங்கட்கு நேர்ந்திட வேண்டாம் என்று அன்னையை வேண்டி மகிழ்வோம். அன்னையை வழிபட்டு அறிவும் திருவும் ஆற்றலும் பெற்றுப் பக்தியொன்றையே குறிக்கோள் ஆகக் கொண்டு கவலையற்று வாழ்ந்திருப்போம்.

பதத்தே உருகிநின் பாதத்தி
லேமனம் பற்றிஉன்றன்
இதத்தே ஒழுக அடிமைகொண்
டாயினி யான்ஒருவர்
மதத்தே மதிமயங் கேன்அவர்
போன வழியுஞ்செல்லேன்
முதத்தேவர் மூவரும் யாவரும்
போற்றும் முகிழ்நகையே.

நன்றே வருகினும் தீதே விளைகினும் நானறிவ
தொன்றேயு மில்லை உனக்கே பரம்எனக் குள்ளஎல்லாம்
அன்றே உனதென் றளித்துவிட் டேன்அழி யாதகுணக்
குன்றே யருட்கட லேயிம வான்பெற்ற கோமளமே.




விக்டோரியா பிரஸ், குன்னூர்.

ஸ்ரீ லலிதாம்பிகை தேவி துணை.

# முதற் பதிப்பின் முகவுரை.

அன்பர்களே! அடியேன் மனச்சாந்தி பெறற்கு, அம்பிகையின் தோத்திர நூல்களில், சிலவற்றைச் சில நாட்களில் சில நேரங்களில், எடுத்துச் சில சில செய்யுட்கள் படித்துச் சிற்றறிவிற்கு எட்டியவாறு பொருள் உணருங்கால் என் ஊன் உருக, உளம் உருக, உடல் உருக, உயிர் உருக நின்று உலகத்தை மறந்து என்னையது அடைவதுண்டு.

அப் பாடல்களின் சுவையே இந் நூல், வசன நடையில் முதலாவதாக வெளிவரக் காரணமானது. அப்பாடல்கள் அடியிற் கண்ட நூல்களிலிருந்து படிக்கப்பெற்றவை.

1. லகுஸ்தவம்.
2. சர்ச்சாஸ்தவம்.
3. கடஸ்தவம்.
4. அம்பாஸ்தவம்
5. ஸகலஜநநீஸ்

6. ஆனந்தசாகரஸ்தவம்.
7. சக்திமகிம்னஸ்தோத்திரம்.
8. மூக பஞ்ச சதீ.

தவரத்னம்.
ய லகரி
ா :




" கன் ) கேண்ணிய
எண் மே."
என்ற நன் னக்கும்போது

" கோமள நின்றநெஞ்
சேயிரங் கேல்உனக் கென்குறையே."

எனச் சொல்லுவாராய் இப்புண்ணிய சீலர்கள்
இந் நூலை அச்சிடப் பொருள் உதவி செய்ய முன் வந்தனர்.

ஸ்ரீமான்கள்.

E. V. கிருஷ்ணையர்.
T. K. கோவிந்தசாமிப்பிள்ளை
N. சடாக்ஷரய்யா

ஸ்ரீமான்கள்.

லால்சந்த், பாங்கர்
D. V. தாவப்பா
L. M. நஞ்சப்பராவ்

மேலே குறிப்பிட்ட கனவான்களுக்குத் தனித்தனி என் நன்றியறிவு வெளிக் காட்டிக்கொண்டு அஞ்சலி நான் செய்வதல்லாமல் பதிலுதவி வேறு என்ன செய்யக்கூடும். அடிமை எண்ணும் ஒவ்வொன்றையும், நினைத்த விதம் நிறை வேற்றுதற் பொருட்டும், இந்த உபகாரிகள் உலகில் உயர்நிலையில் இனிது வாழவும், எல்லாம் வல்ல எம் பிராட்டி பராசக்தி (The Supreme Powers) அம்பிகையின் திருவருளை எந்நேரமும் நினைந்து வாழ்த்துகின்றேன்.

இதனை அச்சிட்டு உதவிய விக்டோரியாப் பிரஸ் தலைவரும், பிரஸ்காரர்களும் தம் அன்பினால் என் நெஞ்சில் இடம் பெற்றனர். நலம்.

" பழைய எவையும் பயந்த ருவவோ
விழையப் புதிய விரும்பா தனவோ."

கூனூர்-நீலகிரி,
27 அக்டோபர் 1943.

இங்ஙன்,
V. S. வேங்கடராமன்.